காணினி, (க)தோட்டார் கதுப்பினென் றோழி யவரொடு
காட்டுச்சார்க் கொய்த சிறுமுல்லை மற்றிவை
முல்லை யிவையாயின் முற்றிய கூழையா
யெல்லிற்றுப் போழ்தாயி னீதோளிக் கண்டேனாற்
(உ)செல்லென்று நின்னை விடுவேன்யான் மற்றெனக்கு
மெல்லிய தோரா வறிவு.

எ - து: அதுகேட்டவள், இனிக்காண்பாயாக; பின்னை இவை இத்
தூாலே நிறையப்பட்ட மயிரினையுடைய என் தோழி ஆயத்தாருடனே காட்
டிடத்தே பறித்த சிறுமுல்லையென்றாள்; அது கேட்டவன், முடிகூடின
மயிரினையுடையாய்! யான்தனியே இவ்விடத்தே*கண்டேனல்; இருந்த இவை
முல்லைப்பூவாயின், இவை தொடுத்துமுடித்து நாங் கூடுதற்குப் பொழுதா
யின், ஒளி இத்தன்மைத்தாயிராநின்றது; நின் நினைவு போக்கிலேயாகில்
யான் போவென்று விடுவதுஞ் செய்வேன்; பின்னை எனக்கு நின்னைப்
போகவிடுதலை †ஓராது இவன் என் அறிவு இளைத்திராநின்றது; இனி இக்
கூட்டத்திற்கு உடம்பட நில்லென்றான். எ - று.

இது (ந)‡இதோளி ஈதோளியெனச் சுட்டு நீண்டு நின்றது; இது சுட்டு
முதலாகிய இகரவீற்று வல்லெழுத்து மிக்கு நின்றது.

---

க. (அ) "தோட்டார் கதுப்பினாள்" குறள். ககOரு. (ஆ) 'தோட்டார் குழலியொடு" சிலப். கரு: ககஅ.

உ. "நின்மொழிகொண் டியானோ விடுவேன்மற் றென்மொழிகொண், டென்னெஞ்ச மேவல் செயின்" கலி. ககந: கஎ - கஅ.

ந. "ஒரு காலத்து வழங்கப்பட்ட சொல் ஒரு காலத்து வாராதாகலும் பொருள் வேறுபடுதலுமுடைய; அதோளி இதோளி உதோளி எனவும் குயின் எனவும் நின்ற இவை ஒருகாலத் துளவாகி இக்காலத் தில வாயின. இவை முற்காலத்துளவென்பதேகொண்டு வீழ்ந்தகாலத்தும் செய்யுள் செய்யப்படா. அவை ஆசிரியர் நூல் செய்த காலத்து உளவாயினும் கடைச்சங்கத்தார் காலத்து வீழ்ந்தமையிற் பாட்டினுந் தொகையினும் அவற்றை நாட்டிக்கொண்டு செய்யுள் செய்திலர்; அவற்றுக்கு இது மாபிலக்கண மாகலி னென்பது" என்று பேராசிரி யரும் "ஒருகாலத்து வழங்கிய சொற்கள் ஒருகாலத்து வழங்காதனவு முள" என்பதற்கு, அதோளி இதோளி உதோளி குயின் என்ப வற்றை மேற்கோள் காட்டி, 'இவை இடைச்சங்கத்திற் காகாவாயின'

பிரதிபேதம்) * கண்டேனு மிருந்தவிவை, † ஓராதிவணனறிவு, ஓராத வவணனறிவு, ‡ இது தொளி யீதொளியென.

இதனல், இருவர்க்கும் புணர்ச்சியுவகை *பிறந்தது.

---

என்று நச்சினார்க்கினியரும், "மரபேதானும்" என்னும் (தோல். செய். அ௦.) சூத்திரத்தினுரையில் எழுதி யிருக்கிறார்கள்; 'இவை இடைச் சங்கத்திற் காகாவாயின' என்ற நச்சினார்க்கினியருக்குக் கடைச்சங்கத்திற் காகுமென்பது கருத்தென்று கொள்ளலாகாது; இச்சொற்கள் வழக்கி லில்லையென்பதே கருத்தென்று கொள்ள வேண்டும். ஆனல், 'சுட்டு முதலாகிய விகரவிறுதியும்' என்னும் (தோல். தொகை. கஎ) சூத்திரவுரையில் இளம்பூரணர்சுட்டுமுதலாகிய இகரவிறுதிக்கு அதோளி, இதோளி, உதோளி என்னுஞ் சொற்களை உதாரணங்காட்டி யிருக்கிறார். நச்சினார்க்கினியரும் அவரையே பின் பற்றி அச்சூத்திரவுரையில் அப்பகுதிக்கு அச்சொற்களையே உதாரணங் காட்டி யிருப்பதோடு 'அதோளி - அவ்விடமென்னும் பொருட்டு' என்று குறிப்பும் எழுதியிருக்கிறார். 'ஞநமவவென்னும் புள்ளிமுன்னர், யஃகா னிற்றன் மெய்பெற் றன்றே" என்னும் (தோல். நூன்மரபு உஎ.) சூத்திரத்துரையில், இங்ஙனம் ஆசிரியர் சூத்திரஞ்செய்தலின் அக்காலத்து இந்நான்கு புள்ளிகளின் முன்னும் யகரம் வரப்பெற்று ஒரு மொழியாக வழங்கிய சொற்கள் உளவென்பது பெற்றாம். அவை இக்காலத்து இறந்தன என்று கூறுபவராகிய இவர், அதோளி முத லியசொற்கள் முற்காலத்துளவாகி இவர்காலத்து இலையாயின் 'சுட்டு முதலாகிய விகரவிறுதியும்' என்னுஞ்சூத்திரவுரையிலும் 'இங்ஙனம் ஆசிரியர்சூத்திரஞ்செய்தலின் அக்காலத்துச், சுட்டுமுதல் இகரவீறான சொற்கள் உளவென்பது பெற்றாம்; அவை இக்காலத்து இறந்தன' என்றன்றோ கூறவேண்டும். இவர் கூற்றுள்ளே முன்னுக்குப் பின் முரணுகின்றதே எனின் முரணாது அமைத்துக்கொள்ளல் வேண்டும். நாமறிந்த அளவில் இச்சொற்குப் பொருளறிவித்தவர் இவரே. அங்கு, அதோளியென்பதற்கு அவ்விடமென்று பொருள்கூறி யிருப்பது போலவே இந்நூலிலும் இச்செய்யுளில் 'இதோளி' என்னுஞ் சொல் லுக்கு 'இவ்விடம்' என்று பொருள் கூறியிருக்கிறார். இவற்றையும் செய்யுளியலுரையில் இவர் எழுதியிருப்பதையும் நோக்கின், இச் சொற்கள் மிகுதியாக வழங்காமை கருதிச் செய்யுளியலில் அவ்வாறு எழுதினரென்றும் இவை அருகி வழங்குமென்பதே இவர் கருத்தென் றும் கொள்ளுதலேதகுதியாம். "கதிர்த்ததண் பூணி கம்புடாழ் பீலிக் கனைகுர ௱ைரைவண் டானம்" (சீவக. உ௧௦அ.) என்பதனுரையில் 'பூணிகம்பு ளென்பன இறந்தவழக்கு' என்று இவர் எழுதியுள்ள

(பிரதிபேதம்) * தோன்றிற்று.

இது கொச்சகக் கலி. (கஎ)

*முல்லைக்கலி முற்றும்.



கருத்தையும் நோக்குக. 'இதோளி' என்னுஞ்சொல் ஒன்றே முதல் நீண்டாவது இந்நூலிற் காணப்படுகின்றது; அதோளி உதோளி யென்பன நாமறிந்தஅளவில் ஓரிடத்துங் காணப்படவில்லை. வடமலையாளமாகிய தளிச்சேரிப்பக்கத்து இப்போதும் ஒளியென்பது இடமென்னும் பொருளில் பெரியோரைச் சுட்டி உயர்சொற் கிளவியாய் வழங்குமென்ப; இச்சொற்கள்பண்டைக்காலத்தே ஈற்றிகரங்குறைந்து ளகர ஈறாயும் வழங்கின வென்பது தோல். புள்ளி. கOரு-ஆம் சூத்திர வுரைகளிலுள்ள உதாரணங்களால் அறியலாகும். கன்னடத்தில் அதரொள் இதரொள் என்பன அதில் இதிலென்னும் பொருளில் வழங்குமென்பதும் இங்கேகருதத்தக்கது. அன்றியும் இக்காலத்து அவ்விடம் இவ்விடமென்னும் பொருளில் வழங்கும் அதோ இதோ என்னுஞ் சொற்களும் அதோள் இதோள் என்பவற்றின் சிதைவோஎன்றும் ஐயமுண்டாகிறது. இவற்றைப் பாகதச் சிதைவென்பாருமுளர். இவற்றுள், இதோவென்பது சிவஞானமுனிவராற் செய்யுளிலும் பல இடத்து எடுத்தாளப்படுகிறது. "மற்றிதா தோன்றுகின்ற, சோலைசூழ் வரையினெற்றி" (சீவக. கஉரு௨) என்புழி, இதா வென்பது இவ்விடமென்னும் பொருளில் சிந்தாமணியிலும் வந்துள்ளது. அங்கு 'இதா, திசைச்சொல்' என்று இவ்வுரையாசிரியர் குறிப்பு எழுதியிருக்கிறார்.

(பிரதிபேதம்) * முல்லைப்பாட்டு முற்றும், முல்லை முற்றும்.

